# பரீட்சகர்களுக்கான பொது அறிவுறுத்தல்கள்

## 47 - இஸ்லாமிய நாகரிகம்

1. நீங்கள் பொறுப்பேற்றுள்ள இப்பணி மாணவர்களின் எதிர்காலத்தை நிர்ணயிக்கும் ஒன்றாதலால் மிகப் பொறுப்புணர்ச்சியோடு நிறைவேற்ற வேண்டியதொன்றாகும்.

2. இப்பணியில் நீங்கள் மிக நேர்மையாக நடக்க வேண்டுமென்பது பரீட்சைகள் திணைக்களத்தின் எதிர்பார்ப்பாகும்.

3. இப்பணி, மறுமையில் அல்லாஹ்விடத்தில் பதில் சொல்ல வேண்டிய ஒரு செயல் என்பதை நீங்கள் நினைவில் வைத்துக் கொள்வது உங்களது செயற்பாடுகளை நேர்மையாக முன்னெடுத்துச் செல்வதற்கு நிச்சயம் உதவும்.

4. **புள்ளித்திட்டம்**

புள்ளித்திட்டம் பரீட்சகர்களிடையே ஒரு முகப்பாட்டை ஏற்படுத்துமாதலால், மாணவர்கள் நியாயமான முறையில் மதிப்பீடு செய்யப்படுவதற்காக, புள்ளித்திட்டத்தை முழுமையாகப் பின்பற்றுவது மிக அவசியமாகும்.

5. **அறிவுறுத்தல்கள்**

பரீட்சைகள் திணைக்களம் முன்வைத்துள்ள அனைத்து அறிவுறுத்தல்களையும் பரீட்சகர்கள் முழுமையாகப் பின்பற்றுதல் அவசியமாகும்.

6. **விடைத்தாள் மதிப்பீடு**

விடைத்தாள்களை மதிப்பிடும் பணியை ஆரம்பிக்க முன் ஒவ்வொரு வினாவுக்கும் மாணவர்களிடமிருந்து எதிர்பார்க்கப்படும் விடை யாது என்பதை புள்ளித்திட்டத்தை நன்கு வாசித்து விளங்கிக் கொள்ளல் வேண்டும். மேலதிக விளக்கங்கள் தேவைப்படின் பிரதம கட்டுப்பாட்டாளர்/ பிரதம பரீட்சகரின் ஆலோசனையைப் பெற்றுக்கொள்ளலாம்.

7. **புள்ளி வழங்கும் ஒழுங்கு.**

வினாப்பத்திரம் 01

இதில் 50 வினாக்கள் உண்டு. ஒவ்வொரு வினாவுக்கும் 02 புள்ளிகள் வீதம் மொத்தம் 50 வினாக்களுக்கும் 100 புள்ளிகள் வழங்கப்படும்.

வினாப்பத்திரம் 02

இதில் பகுதி I பகுதி II என இரு பகுதிகள் உள்ளன. பகுதி I ஒவ்வொன்றும் ஐந்து பிரிவுகளைக் கொண்ட மூன்று வினாக்களை உள்ளடக்கியுள்ளது. பகுதி II ஒவ்வொன்றும் இரண்டு பிரிவுகளைக் கொண்ட ஐந்து வினாக்களை உள்ளடக்கியுள்ளது. பகுதி I ல் இரண்டு வினாக்களுக்கும், பகுதி II ல் மூன்று வினாக்களுக்கும் பரீட்சார்த்திகள் விடையளித்தல் வேண்டும். ஒவ்வொரு வினாவுக்கும் 20 புள்ளிகள் வழங்கப்படும்.

| புள்ளிகள் வழங்கப்படும் ஒழுங்கு | | |
|---|---|---|
| வினாப்பத்திரம் 01<br>50 வினாக்கள்,<br>தலா 02 புள்ளிகள் | 50 x 02 | 100 |
| வினாப்பத்திரம் 02<br>பகுதி I 02 வினாக்கள்<br>பகுதி II 03 வினாக்கள்<br>தலா 20 புள்ளிகள் | 02 x 20<br>03 x 20 | 40<br>60 |

## விடைத்தாள்களுக்குப் புள்ளியிடல் - பொது நுட்ப முறைகள்

விடைத்தாள்களுக்குப் புள்ளியிடும் போதும், புள்ளிப்பட்டியலில் புள்ளிகளைப் பதியும் போதும் ஓர் அங்கீகரிக்கப்பட்ட முறையைக் கடைப்பிடித்தல் கட்டாயமானதாகும். அதன்பொருட்டு பின்வரும் முறையில் செயற்படவும்.

1. விடைத்தாள்களுக்குப் புள்ளியிடுவதற்கு சிவப்பு நிற குமிழ்முனை பேனாவை பயன்படுத்தவும்.
2. சகல விடைத்தாள்களினதும் முதற்பக்கத்தில் உதவிப் பரீட்சகரின் குறியீட்டெண்ணைக் குறிப்பிடவும். இலக்கங்கள் எழுதும்போது **தெளிவான இலக்கத்தில்** எழுதவும்.
3. இலக்கங்களை எழுதும்போது பிழைகள் ஏற்பட்டால் அவற்றைத் தனிக்கோட்டினால் கீறிவிட்டு, மீண்டும் பக்கத்தில் சரியாக எழுதி, சிற்றொப்பத்தை இடவும்.
4. ஒவ்வொரு வினாவினதும் உபபகுதிகளின் விடைகளுக்காக பெற்றுக்கொண்ட புள்ளியை பதியும் போது அந்த வினாப்பகுதிகளின் இறுதியில் △ இன் உள் பதியவும். இறுதிப் புள்ளியை வினா இலக்கத்துடன் □ இன் உள் பின்னமாகப் பதியவும். புள்ளிகளைப் பதிவதற்கு பரீட்சகர்களுக்காக ஒதுக்கப்பட்ட நிரலை உபயோகிக்கவும்.

**உதாரணம் - வினா இல 03**

(i) ........................................................................... ✓ $\frac{4}{5}$
...........................................................................
...........................................................................

(ii) ........................................................................... ✓ $\frac{3}{5}$
...........................................................................
...........................................................................

(iii) ........................................................................... ✓ $\frac{3}{5}$
...........................................................................
...........................................................................

(03) (i) $\frac{4}{5}$ + (ii) $\frac{3}{5}$ + (iii) $\frac{3}{5}$ = $\boxed{\frac{10}{15}}$

**பல்தேர்வு விடைத்தாள் (துளைத்தாள்)**

1. க.பொ.த.(உ. தர) மற்றும் தகவல் தொழிநுட்பப் பரீட்சைக்கான துளைத்தாள் திணைக்களத்தால் வழங்கப்படும். சரியாக துளையிடபட்டு அத்தாட்சிப்படுத்திய துளைத்தாள் தங்களுக்கு கிடைக்கப்பெறும். அத்தாட்சிப்படுத்திய துளைத்தாளைப் பயன்படுத்துவது பரீட்சகரின் கடமையாகும்.
2. அதன் பின்னர் விடைத்தாளை நன்கு பரிசீலித்துப் பார்க்கவும். ஏதாவது வினாவுக்கு, ஒரு விடைக்கும் அதிகமாக குறியிட்டிருந்தாலோ, ஒரு விடைக்காவது குறியிடப்படாமலிருந்தாலோ தெரிவுகளை வெட்டிவிடக்கூடியதாக கோடொன்றைக் கீறவும். சில வேளைகளில் பரீட்சார்த்தி முன்னர் குறிப்பிட்ட விடையை அழித்துவிட்டு வேறு விடைக்குக் குறியிட்டிருக்க முடியும். அவ்வாறு அழித்துள்ள போது நன்கு அழிக்காது விட்டிருந்தால், அவ்வாறு அழிக்கப்பட்ட தெரிவின் மீதும் கோடிடவும்.
3. துளைத்தாளை விடைத்தாளின் மீது சரியாக வைக்கவும். சரியான விடையை ✓ அடையாளத்தாலும் பிழையான விடையை ○ அடையாளத்தாலும் இறுதி நிரலில் அடையாளமிடவும். சரியான விடைகளின் எண்ணிக்கையை அவ்வவ் தெரிவுகளின் இறுதி நிரையின் கீழ் அத்துடன் அவற்றை கூட்டி சரியான புள்ளியை உரிய கட்டத்தில் எழுதவும்.

**கட்டமைப்பு கட்டுரை விடைத்தாள்கள்**

1. பரீட்சார்த்திகளால் விடைத்தாளில் வெறுமையாக விடப்பட்டுள்ள இடங்களையும், பக்கங்களையும் குறுக்குக் கோடிட்டு வெட்டிவிடவும். பிழையான பொருத்தமற்ற விடைகளுக்குக் கீழ் கோடிடவும். புள்ளி வழங்கக்கூடிய இடங்களில் ✓ அடையாளமிட்டு அதனைக் காட்டவும்.
2. புள்ளிகளை ஓவலண்ட் கடதாசியின் இடது பக்கத்தில் குறிக்கவும்.
3. சகல வினாக்களுக்கும் கொடுத்த முழுப் புள்ளியை விடைத்தாளின் முன் பக்கத்திலுள்ள பொருத்தமான பெட்டியினுள் வினா இலக்கத்திற்கு நேராக 2 இலக்கங்களில் பதியவும். வினாத்தாளில் உள்ள அறிவுறுத்தலின் படி வினாக்கள் தெரிவு செய்யப்படல் வேண்டும். எல்லா வினாக்களினதும் புள்ளிகளும் முதல் பக்கத்தில் பதியப்பட்ட பின் விடைத்தாளில் மேலதிகமாக எழுதப்பட்டிருக்கும் விடைகளின் புள்ளிகளில் குறைவான புள்ளிகளை வெட்டி விடவும்.
4. மொத்த புள்ளிகளை கவனமாக கூட்டி முன் பக்கத்தில் உரிய கூட்டில் பதியவும். விடைத்தாளில் வழங்கப்பட்டுள்ள விடைகளுக்கான புள்ளியை மீண்டும் பரிசீலித்த பின் முன்னால் பதியவும். ஒவ்வொரு வினாக்களுக்கும் வழங்கப்படும் புள்ளிகளை உரிய விதத்தில் எழுதுவும்.

## புள்ளிப்பட்டியல் தயாரித்தல்

இம்முறை சகல பாடங்களுக்குமான இறுதிப்புள்ளி குழுவினுள் கணிப்பிடப்படமாட்டாது. இது தவிர ஒவ்வொரு வினாப் பத்திரத்துக்குமான இறுதிப்புள்ளி தனித்தனியாக புள்ளிப்பட்டியலில் பதியப்பட வேண்டும். பத்திரம் I ற்கான பல்தேர்வு வினாப்பத்திரம் மட்டும் இருப்பின் புள்ளிகள் இலக்கத்திலும் எழுத்திலும் பதியப்பட வேண்டும். 51 சித்திரப் பாடத்திற்குரிய I, II, மற்றும் III ஆம் வினாப்பத்திரங்களுக்குரிய புள்ளிகளை தனித்தனியாக புள்ளிப்பட்டியலில் பதிந்து எழுத்திலும் எழுதுதல் வேண்டும்.

ooo

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

05.08.2019 / 0830 – 1030

ඉස්ලාම් ශිෂ්ටාචාරය I
இஸ்லாமிய நாகரிகம் I
Islamic Civilization I

47 T I

පැය දෙකයි
இரண்டு மணித்தியாலம்
Two hours

அறிவுறுத்தல்கள் :

✳ **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
✳ விடைத்தாளில் தரப்பட்டுள்ள இடத்தில் உமது **சுட்டெண்ணை** எழுதுக.
✳ விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களைக் கவனமாக வாசித்துப் பின்பற்றுக.
✳ **1** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் (1), (2), (3), (4), (5) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிந்தெடுத்து, **அதனைக் குறித்து நிற்கும் இலக்கத்தைத் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கு அமைய** விடைத்தாளில் **புள்ளடி** (×) இடுவதன் மூலம் காட்டுக.

**1.** இஸ்லாமிய நாகரிகத்தின் அடிப்படைகளைக் கொண்ட தொகுதியினைத் தெரிவு செய்க.
(1) இபாதத், இமாரத், கிலாபத் (2) தௌஹீத், ரிஸாலத், மஆத் (3) இஸ்மத், இமாமத், விலாயத்
(4) வராஸத், வக்பு, ஸதகா (5) விலாயத், தஸ்கியத், ஹகீகத்

**2.** அறபு மொழியை அரச மொழியாகப் பிரகடனம் செய்த ஆட்சியாளர்,
(1) கலீபா உமர் (ரலி) ஆவார். (2) கலீபா முஆவியா (ரலி) ஆவார். (3) கலீபா அப்துல் மலிக் ஆவார்.
(4) கலீபா ஹாறூன் ஆவார். (5) கலீபா ம.்மூன் ஆவார்.

**3.** கியாஸின் அடிப்படைகளுள் **'பர்உ'** என்பதன் பொருள் யாது?
(1) சட்டம் (2) பொதுத்தன்மை (3) ஒப்பு நோக்குதல்
(4) ஏகோபித்த முடிவு (5) புதிய விடயம்

**4.** 'இலங்கை முஸ்லிம்களின் வரலாறு - 1000 ஆண்டு கால நல்லிணக்கம்' என்ற தலைப்பிலான நூலை எழுதியவர்,
(1) கலாநிதி லோர்ணா தேவராஜா ஆவார். (2) பேராசிரியர் சிறிமா கிரிபமுனே ஆவார்.
(3) கலாநிதி எம்.ஏ.எம். சுக்ரி ஆவார். (4) ஐ.எல்.எம்.ஏ. அஸீஸ் ஆவார்.
(5) வான்சன்டேன் ஆவார்.

**5.** பின்வருவனவற்றுள் மிகச் சரியான கூற்றினைத் தெரிவுசெய்க.
(1) இமாம் அபுல்ஹஸன் அஷ்ஷாதுலி (ரஹ்) உயைனாவில் மரணமானார்.
(2) மத்ரஸதுல் பாரி கிழக்கு மாகாணத்தில் அமைந்துள்ளது.
(3) இமாம் ஷாஹ்வலியுல்லாஹ் (ரஹ்) அவர்களால் 'ஹுஜ்ஜதுல்லாஹ் அல்-பாலிஆ' என்ற நூல் இயற்றப்பட்டது.
(4) மன்னர் ஔரங்கஸீப்பினால் ஆக்ராவில் தாஜ்மஹால், நிர்மாணிக்கப்பட்டுள்ளது.
(5) "குற்றமிழைத்தவர் எவராக இருப்பினும் தண்டிக்கப்படுவார்." என்பது அகபா உடன்படிக்கையின் நிபந்தனைகளுள் ஒன்றாகும்.

**6.** **ஸிப்பீன்** யுத்தம் எந்தக் கலீபாவின் ஆட்சிக் காலத்தில் இடம்பெற்றது?
(1) கலீபா அபூபக்கர் (ரலி) (2) கலீபா உமர் (ரலி)
(3) கலீபா உஸ்மான் (ரலி) (4) கலீபா அலி (ரலி)
(5) கலீபா முஆவியா (ரலி)

7. கீழே **X** நிரலில் நூலாசிரியர்கள் பெயர்களும் **Y** நிரலில் அவர்கள் எழுதிய நூல்களும் ஒழுங்கின்றித் தரப்பட்டுள்ளன.

| X | Y |
|---|---|
| (i) இமாம் அபூலைஸ் ஸமர்கந்தி | A - அல் பஹ்ருல் முஹீத் |
| (ii) இமாம் ஷாபிஈ | B - அல்-உம்மு |
| (iii) இமாம் பக்ருதீன் அர்-ராஸி | C - மபாதிகுல் கைப் |
| (iv) இமாம் ஆலூஸி | D - ரூஹுல் மஆனி |
| (v) இமாம் அபூஹையா | E - பஹ்ருல் உலூம் |

**X** நிரலின் கீழுள்ள நூலாசிரியர்களின் பெயர்களுக்கேற்ப **Y** நிரலிலுள்ள அவர்கள் எழுதிய நூல்கள் ஒழுங்குபடுத்தப்பட்டுள்ள சரியான விடையினைத் தெரிவு செய்க.

(1) B C D E A (2) B E C D A (3) E B C A D
(4) E B C D A (5) E C B D A

8. **தீனே இலாஹி** என்ற சிந்தனையை அறிமுகப்படுத்திய இந்திய முஸ்லிம் ஆட்சியாளர்,
(1) மன்னர் அக்பர் ஆவார்.
(2) மன்னர் ஔரங்கஸீப் ஆவார்.
(3) மன்னர் சிராஜ் பகதூர் ஷாஹ் ஆவார்.
(4) மன்னர் ஷாஜஹான் ஆவார்.
(5) சுல்தான் முஹம்மத் கோரி ஆவார்.

9. பின்வரும் கூற்றுகளுள், ஹதீஸ் தொடர்பான இஸ்லாத்தின் நோக்கில் **முரண்பாடான** கூற்றினைத் தெரிவுசெய்க.
(1) நபி (ஸல்) அவர்களின் மறைவுடன் ஹதீஸ்கள் முற்றுப்பெற்றுள்ளன.
(2) ஹதீஸ்கள் அனைத்தும் ஒரே தராதரத்தை உடையனவாகும்.
(3) முதவாதிர், ஆஹாத் ஹதீஸ் என்பவற்றில் முதவாதிர் ஹதீஸ்களே பலமான ஆதாரமாகும்.
(4) இமாம் புஹாரி, இமாம் முஸ்லிம் ஆகிய இருவராலும் அறிவிப்புச் செய்யப்பட்ட ஹதீஸ்கள் மட்டுமே 'முத்தபகுன் அலைஹி' என அடையாளப்படுத்தப்பட்டுள்ளன.
(5) ஹதீஸ்களின் நம்பகத்தன்மையை உறுதிப்படுத்துவதில் 'அஸ்மாஉர் ரிஜால்' இன் பங்களிப்பு மகத்தானதாகும்.

10. "பெரும்பாவம் செய்த எவருக்கும் நபியவர்களது ஷபாஅத்தைப் பெற முடியாது." என்ற கருத்தை முன்வைத்த சிந்தனைப் பிரிவு யாது?
(1) அல்-அஷ்அரிய்யா (2) அல்-முர்ஜிஆ (3) அல்-முஃதஸிலா
(4) அல்-ஜபரிய்யா (5) அல்-கவாரிஜ்

11. பின்வருவனவற்றுள் **தப்ஸீர், ஹதீஸ்** ஆகிய இரு கலைகளுடனும் தொடர்புபடும் விடயம்
(1) ஸபபுன்நுஸூல் (2) அல்-முஹ்கம் வல் முதஷாபிஹ்
(3) மக்கி - மதனீ (4) ஸபபுல் வுருத்
(5) அந்நாஸிக் வல் மன்ஸூக்

12. அல்-குர்ஆனின் முதல் வசனம் நபியவர்களை வந்தடைந்த சரியான ஒழுங்கு யாது?
(1) லவ்ஹுல் மஹ்பூல் → பைதுல் இஸ்ஸா → ஜிப்ரயில் (அலை) → ஹிராக் குகை
(2) லவ்ஹுல் மஹ்பூல் → பைதுல் இஸ்ஸா → ஜிப்ரயில் (அலை) → ஸௌர்க் குகை
(3) பைதுல் இஸ்ஸா → லவ்ஹுல் மஹ்பூல் → ஜிப்ரயில் (அலை) → ஹிராக் குகை
(4) பைதுல் இஸ்ஸா → லவ்ஹுல் மஹ்பூல் → ஜிப்ரயில் (அலை) → ஸௌர்க் குகை
(5) ஜிப்ரயில் (அலை) → பைதுல் இஸ்ஸா → லவ்ஹுல் மஹ்பூல் → ஸௌர்க் குகை

13. குர்துபா மஸ்ஜிதின் நிர்மாணப் பணிகளை ஆரம்பித்து வைத்தவர்,
(1) முதலாம் அப்துர் ரஹ்மான் ஆவார்.
(2) இரண்டாம் அப்துர் ரஹ்மான் ஆவார்.
(3) கலீபா ஹிஷாம் ஆவார்.
(4) கலீபா இரண்டாம் ஹிஷாம் ஆவார்.
(5) மூன்றாம் அப்துர் ரஹ்மான் ஆவார்.

14. ஸ்பெயின், சிரியா, எகிப்து ஆகிய நாடுகளைக் குறிப்பதற்கு, இஸ்லாமிய வரலாற்றில் பயன்படுத்தப்பட்ட அரபுப் பெயர்கள் முறையே
(1) அல்-மஃரிப், குத்ஸ், மிஸ்ர் என்பனவாகும். (2) ஸன்கீத், ஆபிரிக்கா, ஹபஷா என்பனவாகும்.
(3) அந்தலூஸ், ரூம், புருஸ் என்பனவாகும். (4) அந்தலூஸ், ஷாம், மிஸ்ர் என்பனவாகும்.
(5) அல்-ஹின்த், அல்-மஃரிப், அந்தலூஸ் என்பனவாகும்.

**15.** கலீபா ஹாரூனின் ஆட்சிக் காலத்தில் மிகச் செல்வாக்குடன் இருந்து, அவரது ஆட்சிக் காலத்தில் அவர் மூலமாகவே அழித்தொழிக்கப்பட்டவர்கள்
(1) அஹ்லுல் பைத்கள் (2) பர்மகீக்கள் (3) பாரஸீகர்கள்
(4) மு.ஃதஸிலாக்கள் (5) காரிஜீக்கள்

**16.** அல்-குர்ஆனை நூலுருப்படுத்துவதற்காக உஸ்மான் (ரலி) அவர்களால் நியமிக்கப்பட்ட குழுவின் அங்கத்தவர்களுள் ஒருவராக இருந்தவர்
(1) உபை பின் கஅப் (ரலி) (2) அபூ குஸைமா (ரலி) (3) அபூ தர்தா (ரலி)
(4) ஹுதைபதுல் யமானி (ரலி) (5) ஸஃத் பின் ஆஸ் (ரலி)

**17.** பின்வரும் அறிஞர்களுள் வரலாற்றுத்துறைக்குப் பணியாற்றியவர்,
(1) அல்-பத்தானி ஆவார். (2) உமர் கையாம் ஆவார்.
(3) மாஷா அல்லாஹ் ஆவார். (4) அல்-கிந்தி ஆவார்.
(5) அலி பின் ஸீனா ஆவார்.

**18.** பின்வருவனவற்றைக் கருதுக.
A - அரேபியர் ஒதுக்கப்படல்
B - துருக்கியர் செல்வாக்கு
C - சிற்றரசுகளின் தோற்றம்
D - பைதுல் மால் துஷ்பிரயோகம்
E - வாரிசுகளின் ஒழுங்கீனம்
F - கர்பலா நிகழ்வு
G - அஹ்லுல் பைத்களுக்கே ஆட்சியுரிமை

மேலுள்ளவற்றுள் அப்பாஸியர் வீழ்ச்சிக்கு வழியமைத்த காரணிகளைக் கொண்ட விடையைத் தெரிவுசெய்க.
(1) A, C, E (2) A, E, F (3) B, C, F (4) B, D, G (5) E, F, G

**19.** கண்டி இராஜதானியின் நிர்வாக ஒழுங்கில் முஸ்லிம்கள் பணி செய்த **மடிகே பத்த** என்ற சொல் குறிக்கும் திணைக்களம்
(1) சமையல் பகுதி (2) பாதுகாப்பு (3) மருத்துவம்
(4) கால்நடை பராமரிப்பு (5) மீன்பிடி, போக்குவரத்து

**20.** கீழே **X** நிரலில், இஸ்லாமிய சீர்திருத்தத்துடன் தொடர்புடைய ஆளுமைகள் சிலரது பெயர்களும் **Y** நிரலில், அவ்வாளுமைகளோடு நெருக்கமாக அமைகின்ற விடயங்களும் ஒழுங்கின்றித் தரப்பட்டுள்ளன.

| X | | Y |
|---|---|---|
| (i) | மௌதூதி (ரஹ்) | A - இக்வானுல் முஸ்லிமீன் |
| (ii) | இல்யாஸ் (ரஹ்) | B - தீனே இலாஹி மறுதளிப்பு |
| (iii) | அஹமத் ஸிர்ஹின்த் (ரஹ்) | C - உயைனா |
| (iv) | ஹஸனுல் பன்னா (ரஹ்) | D - தர்ஜுமானுல் குர்ஆன் |
| (v) | அப்துல் வஹ்ஹாப் (ரஹ்) | E - காந்தலா |

**X** நிரலுக்கேற்ற விதத்தில் **Y** நிரலில் உள்ள விடயங்களைப் பொருத்தமாக ஒழுங்குபடுத்தினால் அமையும் சரியான சேர்மானத்தைத் தெரிவு செய்க.
(1) A B C D E (2) B D A C E (3) B D E A C
(4) D B A E C (5) D E B A C

**21.** **தௌஹீத் உலூஹிய்யா** என்பதன் கருத்து யாது?
(1) அனைத்துப் படைப்புக்களதும் படைப்பாளன் அல்லாஹ் ஆவான்.
(2) வணங்கி வழிபடத் தகுந்தவன் அல்லாஹ் ஆவான்.
(3) அல்லாஹ்வின் பெயர்களும் பண்புகளும் ஆகும்.
(4) அகிலத்தின் ஆட்சி அதிகாரம் அனைத்தும் அல்லாஹ்வுக்கே உரியது என்பதாகும்.
(5) மறைவானவற்றில் நம்பிக்கை கொள்வது என்பதாகும்.

**22.** பின்வருவனவற்றுள் **தாருல் ஹிக்மா** பற்றிய சரியான கூற்று யாது?
(1) உமையாக் காலத்தில் ஆரம்பித்து வைக்கப்பட்ட ஆய்வு நிலையம்
(2) ஸெல்ஜுக்கியரால் அபிவிருத்தி செய்யப்பட்ட ஆய்வு நிலையம்
(3) சிலுவைப்போரின்போது அழித்தொழிக்கப்பட்ட ஆய்வு நிலையம்
(4) கலீபா ம.ஃமூனின் கண்காணிப்பில் கட்டியெழுப்பப்பட்ட ஆய்வு நிலையம்
(5) பாத்திமீக்களால் தோற்றுவிக்கப்பட்ட ஆய்வு நிலையம்

**23.** இமாம் ஷாபிஈ (ரஹ்), இமாம் ஷாஹ் வலியுல்லாஹ் (ரஹ்) ஆகியோரால் இயற்றப்பட்ட நூல்கள் முறையே,
(1) அல்-உம்மு, அல் இத்கான் என்பனவாகும்.
(2) அர் ரிஸாலா, ஹுஜ்ஜதுல்லாஹ் அல்-பாலிஆ என்பனவாகும்.
(3) பிக்ஹுல் அக்பர், முஅத்தா என்பனவாகும்.
(4) முஸ்னத் அஹ்மத், ஜாமிஉல் பயான் என்பனவாகும்.
(5) பிக்ஹுல் அக்பர், பிதாயதுல் ஹிதாயா என்பனவாகும்.

**24.** இஸ்லாமிய வரலாற்றில் முதல் **முஜத்தித்** ஆக அடையாளப்படுத்தப்படுபவர்,
(1) இமாம் ஷாபிஈ (ரஹ்) என்பவராவார்.
(2) இமாம் அஹ்மத் பின் ஹன்பல் (ரஹ்) என்பவராவார்.
(3) இமாம் கஸ்ஸாலி (ரஹ்) என்பவராவார்.
(4) கலீபா உமர் பின் அப்துல் அஸீஸ் (ரஹ்) என்பவராவார்.
(5) இமாம் அப்துல் காதிர் ஜீலானி (ரஹ்) என்பவராவார்.

**25.** **அஇம்மதுல் ஹுதா** எனும் பெயரால் சூபிக்களைப் பாராட்டியவர்,
(1) இமாம் கஸ்ஸாலி (ரஹ்) ஆவார்.
(2) இமாம் அப்துல் காதர் (ரஹ்) ஆவார்.
(3) இமாம் இப்னு தைமியா (ரஹ்) ஆவார்.
(4) இமாம் ஷாஹ் வலியுல்லாஹ் (ரஹ்) ஆவார்.
(5) இமாம் புழைல் பின் இயால் (ரஹ்) ஆவார்.

**26.** **அய்யாமுல் அரப்** என்பதன் கருத்து யாது?
(1) போராட்ட நாட்கள் (2) பெருநாள் தினங்கள்
(3) துக்க தினங்கள் (4) ஹஜ்ஜுடைய காலம்
(5) சமாதான நாட்கள்

**27.** பின்வருவனவற்றுள் மிகச் சரியான கூற்றைத் தெரிவுசெய்க.
(1) தாரிக் பின் ஸியாத் எனும் தளபதியின் தலைமையில் சிந்து கைப்பற்றப்பட்டது.
(2) நபி இப்ராஹிம் (அலை) அவர்களால் மஸ்ஜிதுல் அக்ஸா நிர்மாணிக்கப்பட்டது.
(3) அஸ்மா பின்த் அபீபக்கர் (ரலி) அவர்கள் தாதுன் நிதாகைன் என்ற சிறப்புப் பெயரால் அழைக்கப்பட்டார்.
(4) கலீபா உமர்(ரலி) அவர்களுடைய ஆட்சிக் காலத்தில் தபூக், கைபர் ஆகிய யுத்தங்கள் இடம்பெற்றன.
(5) கலீபா ஹகம் அவர்களுடைய ஆட்சிக் காலத்தில் அல் ஹம்ரா மாளிகை நிர்மாணிக்கப்பட்டது.

**28.** உலகம் உருண்டையானது என்பதைக் கண்டறிந்து, அதன் சுற்றளவைக் கணிப்பதற்கு வாய்ப்பாடொன்றை முதன் முதலில் அறிமுகப்படுத்திய முஸ்லிம் அறிஞர்,
(1) அல்-பிரூனி என்பவராவார்.
(2) அல்-ஹுவாரிஸ்மி என்பவராவார்.
(3) அல்-முகத்தஸி என்பவராவார்.
(4) மாஷா அல்லாஹ் என்பவராவார்.
(5) அபூ ஸஈத் அஸ்-ஸன்ஜரி என்பவராவார்.

**29.** அறபு நாட்டில் யூத மதம் அறிமுகமாவதற்குக் காரணமாக இருந்த குழுவினர்
(1) நுழைர், குறைஷ், ஸகீப் (2) நுழைர், குறைஷ், குரைழா (3) குறைஷ், கைனுகா, ஸகீப்
(4) கைனுகா, ஸகீப், குறைஷ் (5) குரைழா, கைனுகா, நுழைர்

**30.** சூபி சிந்தனையில் அமைந்த அல்-குர்ஆனுக்கான விளக்கவுரை,
(1) ஹகாஇகுத் தப்ஸீர் என்பதாகும். (2) ஜாமிஉல் பயான் என்பதாகும்.
(3) தப்ஸீருல் குர்ஆனில் அழீம் என்பதாகும். (4) தப்ஸீர் அல்-கஷ்ஷாப் என்பதாகும்.
(5) அன்வாருல் குர்ஆன் என்பதாகும்.

**31.** இஸ்லாமிய சாம்ராஜ்யத்தின் பாதுகாப்புக்காக முதன் முதலில் கடற்படையை நிறுவியவர்,
(1) கலீபா முஆவியா (ரலி) ஆவார். (2) கலீபா ஹாறூன் அல்-றஷீத் ஆவார்.
(3) கலீபா மஃமூன் ஆவார். (4) கலீபா உஸ்மான் (ரலி) ஆவார்.
(5) கலீபா வலீத் பின் அப்துல் மலிக் ஆவார்.

**32.** **ஸின்தீக்கள்** எனப்படுவோர் யாவர்?
(1) ஹதீஸ் அறிவிப்பாளர்கள் (2) இஸ்லாத்தின் எதிரிகள் (3) ஹனீப்கள்
(4) பைஸாந்தியர் (5) நாஸ்திகர்

**33.** பின்வருவன நாகரிகங்கள் தொடர்பான சில கூற்றுகளாகும்.
A - மெசபொதேமிய நாகரிகம், ஈராக்கின் பபிலோனியாவைத் தலைநகரமாகக் கொண்டிருந்தது.
B - பிர்அவ்ன்களின் ஆட்சி இடம்பெற்ற எகிப்தில் அரசர்கள் தெய்வ வழித்தோன்றலாகக் கருதப்பட்டனர்.
C - இம்மை, மறுமை இரண்டினதும் வெற்றிக்கான வழிகாட்டல்களை இஸ்லாமிய நாகரிகம் கொண்டுள்ளது.
D - உரோம நாகரிகத்தின் அறிவியற் துறைக்கான பங்களிப்பை நல்கியவர்களாக சோக்ரடீஸ், அரிஸ்டோட்டில், பிளேட்டோ ஆகியோர் கருதப்படுகின்றனர்.
E - பாப்பரசர் இரண்டாம் சில்வெஸ்டர், ஸ்பெய்னில் தங்கியிருந்து இஸ்லாமிய நாகரிகம் தொடர்பாகக் கற்றுத் தேர்ந்து, தன் நாடு திரும்பிய அவர் அவற்றை தன் மக்களிடம் முன்வைத்தபோது மக்களால் இன்முகத்துடன் வரவேற்கப்பட்டார்.

மேற்குறித்தவற்றுள் சரியான கூற்றினை / கூற்றுகளைக் கொண்ட தெரிவு யாது?
(1) C (2) E (3) B, D (4) A, B, E (5) A, C, E

**34.** மக்களாட்சி, மன்னராட்சி ஆகியவற்றைக் குறிக்கப் பயன்படுத்தப்படும் அறபுப் பதங்கள் முறையே,
(1) முல்கிய்யத், நுபுவ்வத் என்பனவாகும்.
(2) கிலாபத், ரிஸாலத் என்பனவாகும்.
(3) முல்கிய்யத், கிலாபத் என்பனவாகும்.
(4) நுபுவ்வத், ரிஸாலத் என்பனவாகும்.
(5) கிலாபத், முல்கிய்யத் என்பனவாகும்.

**35.** பின்வருவோருள் நபி (ஸல்) அவர்களால் ஹுதைபிய்யா உடன்படிக்கையை எழுதும் பொறுப்பு யாருக்கு வழங்கப்பட்டது?
(1) அம்ரிப்னுல் ஆஸ் (ரலி) (2) முஆவியா பின் அபீ ஸுப்யான் (ரலி)
(3) ஸைத் பின் ஸாபித் (ரலி) (4) மஆத் பின் ஜபல் (ரலி)
(5) அலி பின் அபீ தாலிப் (ரலி)

**36.** நபி (ஸல்) அவர்களால் ஹபஷாவுக்கு அனுப்பப்பட்ட தூதுக்குழுவுக்குத் தலைமை தாங்கியவர், அகபா உடன்படிக்கையின் பின் இஸ்லாத்தைப் போதிக்க மதீனாவுக்கு அனுப்பப்பட்டவர் முறையே
(1) அலி பின் அபீ தாலிப் (ரலி), அம்ரிப்னுல் ஆஸ் (ரலி) என்போராவர்.
(2) ஜஃபர் பின் அபீதாலிப் (ரலி), முஸ்அப் பின் உமைர் (ரலி) என்போராவர்.
(3) ஜஃபர் பின் அபீதாலிப் (ரலி), ஸைத் பின் ஸாபித் (ரலி) என்போராவர்.
(4) முஸ்அப் பின் உமைர் (ரலி), அம்ரிப்னுல் ஆஸ் (ரலி) என்போராவர்.
(5) உஸ்மான் பின் அப்பான் (ரலி), ஸஃத் பின் அபீ வக்காஸ் (ரலி) என்போராவர்.

**37.** பின்வருவன முஸ்லிம்கள் மத்தியில் பயன்படுத்தப்படும் சில சொற்களாகும்.
A - அவ்ராது E - இஸ்மத்
B - மஸூரா F - கராமத்
C - ஷெய்கு G - ஷஹாதத்
D - திக்ரு H - வராஸத்

மேலுள்ளவற்றுள் **சூபிக்களுடன்** தொடர்புபடும் சொற்களைக் கொண்ட விடையினைத் தெரிவுசெய்க.
(1) A, B, F, G (2) A, C, D, F (3) B, E, G, H
(4) B, E, F, H (5) E, F, G, H

**38.** இந்தியாவில் மொகாலாயப் பேரரசு, துருக்கியில் உஸ்மானிய கிலாபத் என்பன வீழ்ச்சியுற்ற ஆண்டுகள் முறையே
(1) கி.பி. 1857, கி.பி. 1924 (2) கி.பி. 1258, கி.பி. 1857 (3) கி.பி. 1099, கி.பி. 1924
(4) கி.பி. 1492, கி.பி. 1857 (5) கி.பி. 1099, கி.பி. 1492

**39.** **காலித் பின் பகாயா** என்ற பெயரிலான கல்வெட்டு, இலங்கையின் எந்தப் பகுதியில் அமையப் பெற்ற முஸ்லிம் குடியேற்றத்துக்கு ஆதாரமாக அமைகின்றது?
(1) வெலிகம (2) கொழும்பு (3) பேருவளை
(4) புத்தளம் (5) திருகோணமலை

**40.** கீழே **X** நிரலில் ஹதீஸ் துறையோடு தொடர்புடைய இமாம்களின் இயற்பெயர்களும் **Y** நிரலில் அவர்கள் மக்களிடையே பிரபல்யம் பெற்ற பெயர்களும் ஒழுங்கின்றி தரப்பட்டுள்ளன.

| X | Y |
|---|---|
| (i) முஹம்மது பின் இஸ்மாயில் | A - அந்நஸாயி |
| (ii) முஸ்லிம் பின் ஹஜ்ஜாஜ் | B - அபூதாவூத் |
| (iii) சுலைமான் பின் அஷ்அஸ் | C - திர்மிதி |
| (iv) முஹம்மத் பின் ஈஸா | D - முஸ்லிம் |
| (v) அபூ அப்துல் ரஹ்மான் அஹமது பின் ஸுஐப் | E - புஹாரி |

**X** நிரலில் குறிப்பிடப்பட்டுள்ள இமாம்களின் இயற்பெயர்களுக்கமைய **Y** நிரலை ஒழுங்குபடுத்தினால் அமையும் சரியான விடைத் தொகுதியினைத் தெரிவுசெய்க.

(1) A C D E B (2) A C B E D (3) A D E C B
(4) E B A C D (5) E D B C A

**41.** **முஇஸ்ஸுத் தௌலா** எனும் சிறப்புப் பெயரால் அழைக்கப்பட்ட ஆட்சியாளர்கள் பிரதிநிதித்துவப்படுத்திய சிற்றரசு

(1) புவைதிகள் (2) ஸபவியர் (3) ஸெல்ஜுக்கியர் (4) பாத்திமீக்கள் (5) ஐயூபியர்

**42.** மாப்பிள்ளை லெவ்வை ஆலிம் அவர்களால் இலங்கையில் ஆரம்பித்து வைக்கப்பட்ட தரீக்கா

(1) ஷாதுலிய்யா (2) நக்ஷபந்திய்யா (3) காதிரிய்யா
(4) ரிபாஇய்யா (5) நபவிய்யா

**43.** பின்வரும் கூற்றுகளை கருதுக.

A - விஞ்ஞானத்துறைகளில் ஐரோப்பாவின் எழுச்சிக்குக் காரணமாக அமைந்தவர்கள் ஸ்பெய்ன் முஸ்லிம்களாவர்.
B - நாடுகாண் பயணி வஸ்கொடகாமாவுக்கு இந்தியா வந்தடைய வழிகாட்டியாக இருந்தவர் இப்னு மஜீத் ஆவார்.
C - ஸ்கண்டிரியாவில் அமைக்கப்பட்டிருந்த வானிலை அவதான நிலையம் உலகின் முதல் வானிலை அவதான நிலையமாகும்.
D - மஞ்சனீக், தபாபா போன்ற யுத்தக்கருவிகளை முஸ்லிம்களே முதலில் அறிமுகப்படுத்தியுள்ளனர்.

மேற்குறித்தவற்றுள் சரியான கூற்றுகளைக் கொண்ட தெரிவு யாது?

(1) A, B (2) B, C (3) C, D (4) A, B, C (5) B, C, D

**44.** பின்வருவனவற்றுள் மிகச்சரியான கூற்றினைத் தெரிவுசெய்க

(1) இஸ்லாமிய நாகரிகம் மறுமை வெற்றியை இலக்காகக் கொண்டுள்ளது.
(2) அல்-குர்ஆனின் மீதான முஸ்லிமின் முதற் கடமை அதனை ஓதுவது மட்டுமாகும்.
(3) 'இஸ்ராயிலிய்யாத்' என்பது தப்ஸீருடன் புகுத்தப்பட்ட கட்டுக்கதைகளைக் குறிக்கின்றது.
(4) மனித வாழ்வுக்கான வழிகாட்டலை வழங்க மனித அறிவு மட்டும் போதுமானது.
(5) 'ஜாமிஉல் குர்ஆன்' எனும் சிறப்புப் பெயர் ஸைத் பின் ஸாபித் (ரலி) க்கு உரியதாகும்.

**45.** **அஜா இபுல் ஹிந்த்** என்ற நூலில் இலங்கை பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ள விடயம் யாது?

(1) நபியவர்கள் காலம் முதலே இலங்கையில் ஹாஷிமீக்கள் வாழ்ந்துள்ளனர்.
(2) இலங்கை மன்னனால் கலீபா வலீத் பின் அப்துல் மலிக்குக்கு அனுப்பப்பட்ட அன்பளிப்புப் பொருட்கள் இந்திய மன்னன் ஒருவனால் கொள்ளையிடப்பட்டமையே சிந்துப் படையெடுப்புக்கு காரணமாய் அமைந்தது.
(3) வஹப் பின் அபீஹப்ஷா என்ற ஸஹாபி சீனா செல்லும் வழியில் இலங்கையில் தரித்துச் சென்றார்.
(4) மன்னன் அக்ரபோதி இஸ்லாம் பற்றி அறிந்து வர, நபியவர்களிடம் தூதுவர் ஒருவரை அனுப்பினான்.
(5) பொலன்னறுவை இராஜதானியில் அரச ஆலோசகர்களாக முஸ்லிம்கள் சிலர் பணியாற்றியுள்ளனர்.

- **46** தொடக்கம் **50** வரையிலான ஒவ்வொரு வினாவிலும் இரண்டு கூற்றுகள் வீதம் தரப்பட்டுள்ளன. அக்கூற்றுகள் பற்றிய மிகப் பொருத்தமான தொடர்பைக் காட்டும் சரியான விடையினைப் பின்வரும் அட்டவணையிலுள்ள இலக்கம் (1), (2), (3), (4), (5) என்பவற்றிலிருந்து தெரிவு செய்க.

| இலக்கம் | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று |
|---|---|---|
| (1) | சரியானது | சரியானது |
| (2) | சரியானது | பிழையானது |
| (3) | பிழையானது | பிழையானது |
| (4) | பிழையானது | சரியானது |
| (5) | சரியானது | சரியானதாக இருப்பதுடன் முதல் கூற்றை மேலும் விபரிக்கின்றது |

| | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று |
|---|---|---|
| **46.** | நபிகளார் காலம் தொடக்கம் இஜ்திஹாத் பயன்பாட்டில் உள்ளது. | கிலாபத் தலைமையை இமாம் ஹுஸைன் (ரலி) அவர்கள் விட்டுக் கொடுத்ததன் பின்னரே முஆவியா (ரலி) க்கு கிலாபத் தலைமை கிடைத்தது. |
| **47.** | இஹ்வானுல் முஸ்லிமின், இந்தியத் துணைக் கண்டத்தில் தோற்றம் பெற்ற இஸ்லாமிய த.்வா அமைப்பொன்றாகும். | புவைத்துகளின் காலத்திலேயே மத்ரஸா நிழாமிய்யா தோற்றம் பெற்றுள்ளது. |
| **48.** | வஸ்துஹிமி என்பவர் இலங்கை வரலாற்றில் இடம்பெறுகின்ற முஸ்லிம் ஆட்சியாளர்களுள் ஒருவராவார். | மஸ்ஜித்களில் மிஹ்ராப் என்பது கிப்லா திசையைச் குறிக்கும் அடையாளமொன்றாகும். |
| **49.** | பிக்ஹுத்துறையில் மத்ஹப்கள் தோற்றம் பெற்றுள்ளவாறு, தஸவ்வுப் துறையில் தரீக்காக்கள் தோற்றம் பெற்றுள்ளன. | காதியானிகள் எனப்படுவோர் முஸைலமா என்ற போலி நபியின் வழித்தோன்றல்களாவர். |
| **50.** | ஸஹாபாக்கள் காலத்தில் அல்-குர் ஆனிலிருந்து மட்டுமே இஜ்திஹாத் மேற்கொள்ளப்பட்டுள்ளது எனக் குறிப்பிடுவது தவறாகும். | நபிமார்கள், ரஸூல்மார்களின் வருகை முற்றுப் பெற்றுள்ளவாறு முஜ்தஹித்களின் வருகையும் முற்றுப் பெற்றதாகவே உள்ளது. |

* * *

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்

අ.පො.ස. (උ.පෙළ) විභාගය/ க.பொ.த. (உயர் தர)ப் பரீட்சை - 2019

පැරණි නිර්දේශය/ பழைய பாடத்திட்டம்

| විෂය අංකය பாட இலக்கம் | 47 | විෂයය பாடம் | இஸ்லாமிய நாகரிகம் |
|---|---|---|---|

ලකුණු දීමේ පටිපාටිය/புள்ளி வழங்கும் திட்டம்

I පත්‍රය/பத்திரம் I

| ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 01. | 2 | 11. | 5 | 21. | 2 | 31. | 4 | 41. | 1 |
| 02. | 3 | 12. | 1 | 22. | 4 | 32. | 2 | 42. | 3 |
| 03. | 5 | 13. | 2 | 23. | 2 | 33. | 1 | 43. | 5 |
| 04. | 1 | 14. | 4 | 24. | 4 | 34. | 5 | 44. | 3 |
| 05. | 3 | 15. | 2 | 25. | 3 | 35. | 5 | 45. | 4 |
| 06. | 4 | 16. | 5 | 26. | 1 | 36. | 2 | 46. | 2 |
| 07. | 4 | 17. | 4 | 27. | 3 | 37. | 2 | 47. | 3 |
| 08. | 1 | 18. | 1 | 28. | 1 | 38. | 1 | 48. | 1 |
| 09. | 2 | 19. | 5 | 29. | 5 | 39. | 2 | 49. | 2 |
| 10. | 3 | 20. | 5 | 30. | 1 | 40. | 5 | 50. | 2 |

✪ විශේෂ උපදෙස්/ விசேட அறிவுறுத்தல் :

එක් පිළිතුරකට/ ஒரு சரியான விடைக்கு 02 ලකුණු බැගින්/புள்ளி வீதம்

මුළු ලකුණු/மொத்தப் புள்ளிகள் 2 × 50 = 100

# பகுதி I

**வினா இல: (01)**

1. (i) இஸ்லாமிய நாகரிகத்தின் சிறப்புப் பண்புகளைக் குறிப்பிடுக.

- தௌஹீதை அடிப்படையாகக் கொண்டது
- பூரணத்துவம் வாய்ந்தது
- நடுநிலைத் தன்மை கொண்டது
- மனிதநலனை இலக்காகக் கொண்டது
- வஹீயை மையமாக் கொண்டு எழுச்சி பெற்றது
- சர்வதேசமயமானது
- எக்காலத்துக்கும் பொருத்தமானது

இவை போன்ற விடைகள் இருப்பின்... **(04 புள்ளிகள்)**

(ii) பிற நாகரிகங்களின் கலப்பால் இஸ்லாமிய உலகில் ஏற்பட்ட பாதகங்கள் பற்றி விளக்குக.

- அந்நியகலாசார செல்வாக்கு
- ஆடம்பர மோகம்
- முஃதஸிலா போன்ற சிந்தனைப் பிரிவுகளின் தோற்றம்
- ஐக்கியம், ஒருமைப்பாடு என்பன சீர்குலைந்தமை
- கிலாபத் வீழ்ச்சியடைந்தமை

இவை போன்ற விடைகள் இருப்பின்... **(04 புள்ளிகள்)**

(iii) மத்திய காலப்பகுதியில் முஸ்லிம் மற்றும் ஐரோப்பிய நாடுகளது கல்வி நிலை எவ்வாறிருந்தது என்பது பற்றி விவரிக்குக.

**கி.பி. 5ம் நூற்றாண்டுமுதல் 15ம் நூற்றாண்டு வரையான காலப் பகுதி மத்தியகாலப் பகுதியாகும்**

- இக்காலப் பகுதியில் அல்குர்ஆன் மற்றும் நபிகளாரின் வழிகாட்டலினூடாக முஸ்லிம்களிடையே அறிவு வளர்ச்சி அடைந்தமை.
- அறிவியல் நூல்கள், கண்டுபிடிப்புக்கள், நவீனகருவிகள் உருவாக்கம் பெற்றமை.
- அறிவியல் கலாநிலையங்கள், வாசிகசாலைகள் தோன்றி அறிவுத் துறை வளர்ச்சியுற்றமை.
- ஐரோப்பா இக்காலப் பகுதியில் அறிவுச் சூன்யத்தில், இருண்டயுகத்தில் அமைந்திருந்தமை.
- ஐரோப்பாவில் அறிவு மற்றும் ஆராய்ச்சிகள் கிறிஸ்தவ திருச்சபையின் கண்காணிப்பில் இருந்தமை.
- அறிவுத் துறையில் ஆர்வம் காட்டியவர்கள் கொடூரமாகத் தண்டிக்கப்பட்டமை.
- மூட நம்பிக்கைகள் பரவலாக் காணப்பட்டமை.
- ஐரோப்பியர் முஸ்லீம் பிரதேசங்களுக்குச் சென்று அறிவைப் பெறுவதில் ஈடுபாடு காட்டியமை.

இவை போன்ற விடைகள் இருப்பின்... **(04 புள்ளிகள்)**

(iv) முஸ்லிம்கள் புவியியற் துறையில் ஈடுபடுவதற்கு வழியமைத்த காரணங்களைப் பரிசீலிக்குக.

- அல்குர்ஆன் மற்றும் ஹதீஸின் தூண்டுதல்.
- கிரேக்க, பாரசீக, இந்திய அறிவியல் நூல்கள் மொழியாக்கம் செய்யப்பட்டமை.
- ஆட்சியாளர்களின் தூண்டுதல்.
- பகுத்தறிவுக்குப் பொருந்தாத விடயங்களை இனங்கண்டு திருத்த முனைந்தமை
- அறபு முஸ்லிம்களின் வர்த்தகத் துறை ஈடுபாடு
- பரந்து விரிந்த இஸ்லாமிய சாம்ராஜ்ஜியத்தை அபிவிருத்தி செய்யவேண்டி ஏற்பட்டமை
- உலகை அறிவதிலும், அவதானிப்பதிலும் முஸ்லிம்கள் காட்டிய ஆர்வம்
- இஸ்லாமிய வணக்க வழிபாடுகள் சிலவற்றை மேற்கொள்வதற்கு புவியியல் அறிவு அவசியப்பட்டமை

இவை போன்ற விடைகள் இருப்பின்... **(04 புள்ளிகள்)**

(v) முஸ்லிம் மருத்துவ அறிஞர் ஒருவர், மருத்துவத்துறைக்கு ஆற்றிய பங்களிப்பை மதிப்பிடுக.

- அறிஞர் பற்றிய அறிமுகம் (ஆசிரியர், மாணவர்)
- நூல்கள்
- கண்டுபிடிப்புக்கள்

**வினா இல: (02)**

**2.** (i) தௌஹீதின் பிரதான **இரண்டு** பிரிவுகளையும், அவற்றுள் உள்ளடங்கும் **மூன்று** முக்கிய பிரிவுகளையும் குறிப்பிடுக.

- நம்பிக்கை சார்ந்தது.
- நடத்தை சார்ந்தது.

1 தௌஹீத் ரூபூபிய்யா
2 தௌஹீத் உலூஹிய்யா
3 தௌஹீத் அஸ்மா வஸ்ஸிபாத்

**(04 புள்ளிகள்)**

(ii) ஸுன்னாவின் முக்கியத்துவத்தை அல்-குர்ஆன் ஆதாரங்களுடன் விவரிக்குக.

- நீங்கள் மெய்யாகவே அல்லாஹ்வை நேசிப்பவர்களாக இருந்தால் என்னைப் பின்பற்றுங்கள். உங்களை அல்லாஹ் நேசிப்பான் **(3:31)**
- எவர்கள் அல்லாஹ்வையும் இறுதி நாளையும் உறுதியாக நம்புகிறார்களோ அவர்கள் பின்பற்றி நடக்க வேண்டிய அழகான முன்மாதிரி அல்லாஹ்வின் தூதரிடமே இருக்கின்றது. **(33:32)**
- நீங்கள் ஏதாவது ஒரு விடயத்தில் முரண்பட்டால் அதனை அல்லாஹ்விடமும் அவனுடைய தூதரிடமும் விட்டுவிடுங்கள். **(4:59)**

இவை போன்ற வசனங்கள் இருப்பின்... **(04 புள்ளிகள்)**

(iii) இஸ்லாமிய சட்டவாக்கத்தில், துணை மூலாதாரங்கள் அவசியப்பட்டமைக்கான காரணங்களைக் குறிப்பிடுக.

- நபியவர்களின் வபாத்துடன் வஹி முற்றுப் பெற்றமை.
- இஸ்லாமிய சாம்ராஜ்யம் விரிவடைந்து புதிய பிரச்சினைகள் தோற்றம் பெற்றமை.
- அல்குர்ஆன், ஹதீஸில் புதிய பிரச்சினைகளுக்கு நேரடித் தீர்வு கிடைக்காமை.
- இஸ்லாம் எக்காலத்திற்கும் பொருத்தமானது என்பதை நிருவவேண்டிய தேவை ஏற்பட்டமை
- அடிப்படை விதிகளுக்கு மாற்றம் ஏற்படாமல் நெகிழ்ச்சியாக சட்டங்களை விரிவு படுத்த வேண்டியமை
- பித்அத், தக்லித் மற்றும் பிழையான கருத்துக்களில் இருந்து சமூகத்தை பாதுகாக்க வேண்டியமை

இவை போன்ற விடைகள் இருப்பின்... **(04 புள்ளிகள்)**

(iv) முஸ்லிம்களிடையே தோற்றம் பெற்ற சமய சிந்தனைப் பிரிவுகள், முஸ்லிம்களிடையே ஏற்படுத்திய பாதிப்புகள் **நான்கினை** விவரிக்குக.

- முஸ்லிம் சமூகத்தின் ஐக்கியம் சிதைவுற்றமை
- அகீதா கோட்பாடுகள் சர்ச்சைகள் நிறைந்த துறையாக நோக்கப்பட்டமை
- முஸ்லிம்கள் தமக்குள் மோதிக் கொள்ளும் நிலை உருவானமை
- இஸ்லாத்தின் எதிரிகளுக்கு இஸ்லாத்தையும், முஸ்லிம்களையும் விமர்சிக்கும் வாய்ப்பு ஏற்படல்
- இஸ்லாமிய கிலாபத் வலுவிழந்து நலிவுற்றமை
- ஏகத்துவத்திற்கு முரணான கொள்கைகள் தோன்றியமை
- முஸ்லிம்களே முஸ்லிம்களை அந்நிய சக்திகளிடம் காட்டிக் கொடுக்கும் நிலை தோன்றியமை.

இவை போன்ற... **(04 புள்ளிகள்)**

(v) இமாம் ஷாபிஈ (ரஹ்) அவர்கள் பிக்ஹுத் துறைக்கு ஆற்றிய பங்களிப்பை மதிப்பீடு செய்க.

- இமாம் ஷாபிஈ அவர்களின் பிறப்பு
  ஹிஜ்ரி (– 150 பலஸ்தீனில் உள்ள காஸா, அபூ அப்துல்லாஹ் முஹம்மத் இப்னு இத்ரீஸ்)
- தாயாரின் வழிகாட்டலுடன் இளமைப்பருவத்தை கழித்தமை
- அறிவுத் துறை ஈடுபாடு
  (அறபு மொழி, இலக்கியம் என்பவற்றில் புலமை பெறல், மதீனாவில் இமாம் மாலிக்கிடம் ஹதிஸ், சட்டம் என்பன பயிலல்)
  <u>சட்டத்துறை பங்களிப்பு</u>
- 15 வயதில் தீர்ப்பு வழங்கும் தகுதியை பெற்றமை. ( இமாம் அபுஹனீபாவின் ரஃயு மரபையும், இமாம் மாலிகின் “ அஸ்ர்” மரபை இணைத்து புதியதொரு சட்டப் பாரம்பரியத்தை உருவாக்குதல்.
  உஸலுல் பிக்ஹ் கலைக்கு பங்களிப்பு செய்தமை – “அர்ரிஸாலா”
- கால இட வேறுபாடுகளுக்கு அமைய வேறுபட்ட பத்வாக்களை வழங்கல்.
  (பக்தாத் / கவ்லுல் கதீம் – எகிப்து / கவ்லுல் ஜதீத்)
- நூலாக்கம் : உம்மு, ரிசாலா, முஸ்னத்
  மாணவர்கள் : இமாம் அஹ்மத் இப்னு ஹன்பல்

இவை போன்ற நான்கு கருத்துக்களை சுருக்கமாக விளக்கி இருப்பின். **(04 புள்ளிகள்)**

**வினா இல: (03)**

3. (i) உமையா கிலாபத்தை ஸ்திரப்படுத்துவதில் கலீபா முஆவியா (ரலி) யின் பங்களிப்பைக் கலந்துரையாடுக.

- நீண்ட காலமாக சிரியாவின் ஆளுனராக இருந்து படிப்படியாக அங்கு உமையாக்களைக் குடியமர்த்தி தனது இருப்பை உறுதிப்படுத்திக் கொண்டமை.
- டமஸ்கஸை தலைநகராக அமைத்துக் கொண்டமை
- தனது பகைவர்களை ஆதரவாளர்களாக மாற்றிக் கொண்டமை
- நிர்வாக ஒழுங்குகளை ஏற்படுத்தியமை (உரோம மரபைத் தழுவி)
- எல்லைப் புறங்களில் உரோமர்களது ஆதிக்கத்தை முறியடித்தமை.

இவை போன்ற விடைகள் இருப்பின்... **(04 புள்ளிகள்)**

(ii) கிலாபதுர் ராஷிதா, உமையா கிலாபத் என்பவற்றுக்கிடையே காணப்பட்ட நிர்வாக ரீதியிலான வேறுபாடுகளைப் பட்டியற்படுத்துக.

| கிலாபத்து ராஷிதா | உமையா கிலாபத் |
|---|---|
| • ஜனநாயக முறை | பரம்பரை ஆட்சி முறை |
| • மஜ்லிஸுஸ் ஸுராவில் தகுதி தக்வாஉடையோர் நியமிக்கப்படல். | உமைய்யா குடும்பத்தினர் நியமிக்கப்படல் |
| • பைதுல்மால் பொதுச் சொத்தாகக் காணப்படல் | பைத்துல் மால் குடும்ப சொத்தாக காணப்படல் |
| • தகுதியும் திறமையும் கொண்டவர்களுக்கு பதவிகள் வழங்கப்படல் | உமைய்யா குடும்பத்தினருக்கு முன்னுரிமை வழங்கப்படல் |
| • இஸ்லாமிய வாழ்வு எளிமையான முறையில் அமைதல் | பைஸாந்தியருக்கு ஒப்பான வாழ்க்கை முறை காணப்படல் |
| • இஸ்லாமிய ஷரிஆ முன்னுரிமைப்படுத்தப்படல் | இஸ்லாமிய ஷரிஆ உரிய அந்தஸ்தை இழத்தல் |
| • மக்கள் அபிலாசைகள் முதன்மை பெறல் | உமையா குடும்பம் முதன்மை பெறல் |

**(04 புள்ளிகள்)**

(iii) கலீபா அப்துல் மலிக் அவர்கள் தனது ஆட்சியின்போது எதிர்கொண்ட பல்கோண சவால்களை விவரிக்குக.

(அப்துல் மலிக் இப்னு மர்வான் கிலாபத் பதவியேற்ற போது பல்வேறுபட்ட பிரச்சனைளுக்கு முகம் கொடுத்தார்)

- காலிதின் பிரச்சினை – (அரண்மனை)
- முக்தாரின் பிரச்சினை – (கூபா)
- அப்துல்லாஹ் பின் ஸுபைரின் கிலாபத் பிரகடனம் – (மக்கா)
- கவாரிஜ்களது கிளர்ச்சிகள் – (நாட்டில் பரவலாக)
- உரோமர்களது பிரச்சினைகள் – (எல்லைப்புற)

மேற் குறிப்பிட்ட அம்சங்களை சுருக்கமாக விளக்கி இருப்பின்... **(04 புள்ளிகள்)**

(iv) கலீபா அபூஜஃபர் அல்-மன்ஸூரின் சேவைகளை மதிப்பிடுக.

- எதிரிகள் ஒழிக்கப்படல்
- பொருத்தமான இடத்தில் தலைநகர் நிர்மாணம்
- தாருல் ஹிக்மாவை உருவாக்கியமை
- புதிய நிர்வாக ஒழுங்குகளை ஏற்படுத்தல் (வஸீர், ஹாஜிப்)
- தகுதி உடையோருக்கு உயர்பதவிகளை வழங்கல்.
- இராணுவத்தை உறுதிப்படுத்தியமை.
- திரைசேரியினை பாதுகாத்தமை
- அபிவிருத்தித் திட்டங்களை மேற்கொண்டமை.

இவை போன்ற... **(04 புள்ளிகள்)**

(v) அப்பாஸிய கிலாபத்தின் வீழ்ச்சிக்கு வழியமைத்த காரணிகளைப் பரிசீலிக்குக.

**அப்பாஸிய ஆட்சியின் வீழ்ச்சிக்கான காரணிகள்**

- பின்வந்த ஆட்சியாளர்களின் பலவீனம்
- சிற்றரசுகளின் தோற்றம்
- சமய ரீதியான உட்பிரிவுகளின் தோற்றம்
- கலீபாக்களின் ஆடம்பரவாழ்வு
- வர்க்கப் பகைமை
- துருக்கியரின் செல்வாக்கு
- சமயமும் அரசும் பிரித்து நோக்கப்படல்
- இராணுவத்தின் மீதான அதிருப்தி
- அந்நியர் படையெடுப்பு (மங்கோலியர் ஹுலாகுகான்) செயற்பாடுகள்
- சிலுவை யுத்தம்

இவை போன்ற நான்கு கருத்துக்ளை சுருக்கமாக விளக்கி இருப்பின்.. **(04 புள்ளிகள்)**

# பகுதி II

**வினா இல: (04)**

**4.** (i) மதீனா சாசனத்தின் முக்கிய நிபந்தனைகளைக் குறிப்பிட்டு, அவற்றுள் சமய நல்லிணக்கத்தை வெளிப்படுத்துபவற்றை விவரிக்குக.

**மதீனா சாசனம் நபியவர்களும் யூதர்களும் செய்து கொண்ட உடன்படிக்கையாகும். இதில் 23 நிபந்தனைகள் முஹாஜிர்கள் அன்ஸாரிகள் தொடர்பானவை ஏனையவை யூதர்கள் தொடர்பானவை.**

- இதில் கையொப்பம் இடும் அனைவரும் ஒரே நாட்டவராகக் கருதப்படுவர்
- ஒவ்வொருவருக்கும் தாம் விரும்பிய மதத்தைப் பின்பற்றுவதற்கான உரிமையுண்டு.
- மதீனா தாக்கப்படும் போது அனைவரும் ஒன்றிணைந்து மதினாவைப் பாதுகாக்க வேண்டும்.
- யாராவது குற்றம் இழைத்தால் தண்டனைக்கு உட்படுத்தப்படுவர்.
- போரிடுவதாயினும், உடன்படிக்கை செய்வதாயினும் இரு தரப்பினரும் தமக்குள் கலந்து ஆலோசித்துக் கொள்ள வேண்டும்
- பிறரோடு போரிட நேரிட்டால் பரஸ்பரம் ஒருவருக்கு ஒருவர் உதவி செய்து கொள்ள வேண்டும்.
- உடன்படிக்கையை பின்பற்றும் போது ஏதேனும் முரண்பாடுகள் ஏற்பட்டால் அல்லாஹ்வினதும் நபிகளினதும் முடிவு இறுதியாக அமையும்

**இந் நிபந்தனைகளின் ஊடாக**

- பூரணமாக சமய சுதந்திரம் எடுத்துக் காட்டப்பட்டுள்ளமை
- கட்டுப்பாடும் ஒழுங்கும் வலியுறுத்தியுறுத்தப்பட்டுள்ளமை.
- தலைமைத்துவ கட்டுப்பாட்டுக்கு முன்னுரிமை வழங்கியுள்ளமை
- இன சமய வேறுபாடற்ற சமூக நீதி புலப்படுத்தப்பட்டுள்ளமை.

இவை போன்ற... **(10 புள்ளிகள்)**

(ii) கிலாபத் ஆட்சிக்கும் மேற்குலகின் ஜனநாயக ஆட்சிக்கும் இடையே காணப்படும் ஒற்றுமை, வேற்றுமைகளைப் பட்டியற்படுத்துக.

**கிலாபாத் ஆட்சிக்கும் மேற்கின் ஜனநாயக ஆட்சிக்கும் இடையே பல்வேறு ஒற்றுமைகள், வேற்றுமைகள் காணப்படுகின்றன.**

- இறைமை அதிகாரம்
  மே.ஜனநாயகம் – மனிதர்களுக்கு உரியது.
  கிலாபத் – அல்லாஹ்வுக்கு உரியது.

- ஆட்சியாளர் தகைமை
  மே.ஜனநாயகம் – தக்வா ஒரு பொருட்டல்ல
  கிலாபத் – தக்வா அவசியமானது.

- மஸூரா ஒழுங்கு
  மே.ஜனநாயகம் – ஆட்சியாளர்களுக்கு வேண்டப்பட்டவர்களிடமிருந்து ஆலோசனை பெறப்படல்.
  கிலாபத் – தகுதியுடையோரின் ஆலோசனை பெறப்படல்.

- ஆட்சியாளர் தெரிவு
  மே.ஜனநாயகம் – மக்கள்
  கிலாபத் – மக்கள்

- ஆட்சியாளரின் பிரதான பணி
  மே.ஜனநாயகம் – பொருளாதார நோக்கு
  கிலாபத் – மக்கள் நலன்

- நியமனமும் நீக்கமும்
  மே.ஜனநாயகம் – ஆட்சியாளரின் விருப்பு வெறுப்பு
  கிலாபத் – மஜ்லிஸுஸ்ஸூரா முடிவு

இவை போன்ற... **(10 புள்ளிகள்)**

**வினா இல: (05)**

**5.** (i) இஸ்லாத்தின் ஆரம்ப நூற்றாண்டிலேயே இலங்கையில் இஸ்லாம் அறிமுகப்படுத்தப்பட்டமை பற்றி விளக்குக.

- அரபு வர்த்தகர்கள் மூலம் இஸ்லாம் பற்றிய அறிமுகம் முதலில் இலங்கைக்குக் கிடைத்தமை
- ஹிக்ரி 6 இல் வஹப் இப்னு அபீஹப்ஸா என்ற நபித்தோழர் சீனாவுக்கு செல்லும் வழியில் இலங்கையில் தரித்து சென்றமை
- இலங்கை மன்னன் இஸ்லாத்தை அறிந்து வர தூதர் ஒருவரை அனுப்பி வைத்தமை (அஜாஇபுல் ஹின்த் என்ற நூலில் தரும் குறிப்பு)
- முஸ்லீம் வர்த்தகர்கள் சுதேஷ பெண்களை திருமணம் செய்தமை.
- உமையாக்களின் கொடுமைகளுக்கு அஞ்சி இலங்கையில் ஹாசீமீக்கள் குடியேறியமை.

**(10 புள்ளிகள்)**

(ii) இலங்கை முஸ்லிம்களின் கல்வி மேம்பாட்டுக்கு அறிஞர் சித்திலெவ்வை ஆற்றிய பங்களிப்பை மதிப்பீடு செய்க.

- அறிஞர் சித்தி லெப்பை பல துறைகளிலும் இலங்கை மக்களின் நலனுக்காக முன்னின்று உழைத்த ஒரு அறிஞராவார்.
- முஸ்லீம்களின் கல்வி விருத்தியை வலியுறுத்தி கொழும்பிலும் கண்டியிலும் விழிப்புணர்வு ஏற்படுத்தியமை
- கொழும்பு ஸாஹிரா கல்லூரியினை ஆரம்பித்து அதன் ஆசிரியராகவும், அதிபராகவும் கடமையாற்றியமை.
- பாடநூல்களை சுயமாக எழுதியமை.
- பெண்களின் கல்வி வளர்ச்சிக்காக கண்டியில் தனியானதொரு பாடசாலையினை அமைத்தமை.
- முஸ்லீம் நேசன் என்ற பத்திரிக்கையின் மூலமாக முஸ்லிம்களின் கல்வி வளர்ச்சிக்காக தூண்டுதல்களை வழங்கியமை
- ஆன்மீக, அறிவியல் நூல்களையும் சஞ்சிகைகளையும் வெளியிட்டமை.

**(10 புள்ளிகள்)**

**வினா இல: (06)**

**6.** (i) நபிகளார் காலத்தில் ஹதீஸ்களைப் பாதுகாப்பதில் மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கைகளை விளக்குக.

**நபித்துவத்தில் இருந்து நபியின் வபாத் வரையான காலப்பகுதி ஹதீஸ கலை வரலாற்றில் நபியவர்களின் காலமாக கணிக்கப்படுகின்றது.**

**பாதுகாப்பு நடவடிக்கைகள்**

i மனனம்

- ஹதீஸ்களை மனனம் இடுவதால் கிடைக்கும் சிறப்புக்கள் பற்றி நபியவர்களின் போதனைகளினால் ஸஹாபாக்கள் ஹதீஸ் மனனம் இடலில் ஆர்வத்துடன் ஈடுபட்டமை.
- நபியவர்கள் ஹதீஸ்களை சொன்னவுடன் ஸஹாபாக்கள் உடனுக்குடன் அவற்றை மனனம் செய்து கொண்டமை.
- பெண்களும் மனனம் இடலில் பங்கு கொண்டமை
- மனனமிடல் நபியவர்களால் பரீட்சித்துப் பார்க்கப்பட்டமை.

ii எழுதுதல்

- அல்குர்ஆனுடன் ஹதீஸ்கள் கலந்து விடும் என்பதனால் ஆரம்பத்தில் எழுதுவதற்கு தடைசெய்தமை.
- எழுதுவதில் தேர்ச்சியுள்ள ஸஹாபாக்கள் ஹதீஸ்களை எழுதி வந்தமை
  உ+ ம் அப்துல்லா இப்னு அம்ர் இப்னு ஆஸ்
- மனனம் இடுவது சிரமம் என ஸஹாபாக்கள் முறையிட்ட பொழுது அவர்களுக்கு எழுதிக் கொள்வதற்கு அனுமதி வழங்கியமை.
  உ+ ம் அபு ஸாஹ்

iii வாழ்க்கையில் நடைமுறைப்படுத்தியமை.

- நபியவர்களின் ஒவ்வொரு செயலையும் ஸஹாபாக்கள் அணு அணுவாக பின்பற்றியமை.

iv கற்றுக்கொடுத்தல் / போதனை செய்தல்

- நபியவர்கள் சொன்ன பாணியிலேயே ஹதீஸ்களை சொல்ல முயற்சித்தமை.

**(10 புள்ளிகள்)**

(ii) பிக்ஹுக்கலையின் தோற்றத்துக்கு வழியமைத்த விடயங்களைத் தெளிவுபடுத்துக.

**பிக்ஹ் என்ற பதம் சுட்டிக் காட்டல், தெளிவு படுத்தல், விளக்கிவைத்தல், வார்த்தையில் உள்ள சிக்கல்களை அகற்றிவிடல் எனும் கருத்துக்களைக் கொடுக்கின்றது.**
**ஒரு மனிதனின் வாழ்க்கையில் ஏற்படும் சகல பிரச்சினைகளுக்கும் அல்குர்ஆன், ஹதீஸ் துணை மூலாதாரங்கள் அடிப்படையில் வழங்கப்படும் சட்ட விளக்கம் 'பிக்ஹ்' என அழைக்கப்படுகின்றது.**

- நபிகளாரின் மறைவின் பின் முஸ்லிம்களிடையே எழுந்த பிரச்சினைகளுக்கு தீர்வு காண வேண்டிய நிலை ஸஹாபாக்களுக்கு ஏற்பட்டமை.
- குர்ஆனில் காணப்படும் முதஷாபிஹான வசனங்களில் கருத்து வேறுபாடுகளுக்கு இடம் பாடு காணப்பட்டமை
- அல்குர்ஆன் ஹதீஸ் வசனங்களை விளக்குவதிலும் விளங்குவதிலும் ஏற்றத்தாழ்வு காணப்பட்டமை
- அல்குர்ஆன் ஹதீஸ் வசனங்களை அடிப்படையாக கொண்டு நேரடித் தீர்வுகள் காணப்படாத விடயங்களில் தீர்வுகள் காண முற்பட்டமை.
- சட்டக்கலையில் ரஃயு குறிப்பிடத்தக்க இடத்தைப் பெற்றுக்கொண்டமை

- இஸ்லாமிய சாம்ராஜ்ய விரிவு மற்றும் முஸ்லீம்களின் எண்ணிக்கை அதிகரிப்பினால் பலதரப்பட்ட பிரச்சினை உருவாகியமை
- மக்கா, மதீனா, கூபா, பஸரா போன்ற பிரதேசங்களில் குறிப்பிட்ட பிரச்சினைகளுக்கு வித்தியாசமான தீர்வுகள் உருவாகியமை.
- சட்ட ஆய்வுக்கான வசதிகள், வாய்ப்புக்கள் ஏற்பட்டமை.
- தகுதிபெற்ற சட்டத்துறை அறிஞர்க்ள உருவாக்கம் பெற்றமை.

இவை போன்ற.. **(10 புள்ளிகள்)**

**வினா இல: (07)**

7. (i) நபியவர்களுக்கு அல்-குர்ஆன் பகுதி பகுதியாக அருளப்பட்டமைக்கான காரணங்கள் **ஐந்தினை** விளக்குக.

- நபியவர்களின் உள்ளத்தை உறுதிப்படுத்தல்.
- மனனம் செய்து பாதுகாப்பதற்கு இலகுபடுத்தல்.
- சமூகமாற்றத்தைப் படித்தரவிருத்திக்கேற்ப கட்டம் கட்டமாக கட்டியெழுப்புதல்.
- நபியவர்களிடம் வினவப்பட்ட வினாக்களுக்கு விடையாக அமைதல்.
- அல்லாஹ்வின் நாட்டமும், திட்டமும்.
- பௌதீக விடயங்களை எடுத்துக்காட்டி அல்லாஹ்வின் அத்தாட்சிகளை உறுதிப்படுத்துதல்.
- தஃவாபணியின் போது எதிர்நோக்கிய இன்னல்களில் இருந்து விரக்தி அடையாதிருக்க முன்னைய நபிமார்களின் வரலாறுகளை கூறல்.

இவை போன்ற.. **(10 புள்ளிகள்)**

(ii) "இஜ்திஹாத், சட்டம் பெறுவதற்கான ஒரு வழிமுறையாகும்." என்பதை அல்-குர்ஆன், அல்-ஹதீஸ் ஆதாரங்களுடன் விளக்குக.

- இஜ்திஹாதுக்கான அல்குர்ஆன் ஆதாரம்.

  மேலும் பீதியோ பாதுகாப்பை பற்றிய செய்தியோ அவர்களுக்கு எட்டுமானால் உடனடியாக அவர்கள் அதனைப் பரப்பி விடுவார்கள். அவர்கள் அதைத் தூதரிடமோ அவர்களில் நின்றுமுள்ள அதிகாரிகளிடமோ தெரிவித்தால், அவர்களில் இருந்து அதை ஊகித்து அறியக் கூடியவர்கள் அதை நன்கு விசாரித்து அறிந்து கொள்வார்கள். ( 4:83)

  அன்றியும் தம் காரியங்களை தம்மிடையே கலந்து ஆலோசித்து கொள்வார்கள். ( 4:38)

  அல்லாஹ் உமக்குக் காட்டித் தந்ததன் பிரகாரம் மக்களுக்கு மத்தியில் தீர்ப்பளிப்பதற்காக சத்தியத்தை கொண்டுள்ள இவ்வேதத்தை நாம் உம்மீது நிச்சயமாக இறக்கி வைக்கிறோம். (4:105)

- இஜ்திஹாதுக்கான ஹதீஸ் ஆதாரம்.

1 இஜ்திஹாத் செய்து தீர்ப்புச் சொல்பவர் அவரது முடிவு சரியாக அமைந்தால் அவருக்கு இரண்டு கூலியும் முடிவு பிழையாக அமைந்தால் அவருக்கு ஒரு கூலியும் உண்டு.

2 பனு குறைழா சம்பவம்
உங்களில் எவரும் பனு குறைழாவிலேயே அன்றி அஸர் தொழக் கூடாது. சிலர் பயண வழியிலும் வேறு சிலர் நபியவர்கள் கூறிய பிரகாரமும் தொழுகையில் ஈடுபட்டமை.

3 ஸஹாபிக்கள் இருவர் பயனத்தின் போது தயமத்துடன் தொழுகையை நிறைவேற்றியமை.

**வினா இல:(08)**

**8.** (i) இஸ்லாமிய நாகரிகம் தேக்கமடைந்தமைக்கான காரணங்களை விளக்குக.

- இஸ்லாம் பற்றிய போதிய தெளிவின்மை
- இஸ்லாத்தை அதன் முழு மொத்த வடிவில் நோக்காது சடங்கு சம்பிரதாயங்களோடு மாத்திரம் சுருக்கிக் கொண்டமை
- பொருளாதார வளங்கள் சரியாகப் பயன்படுத்தப்படாமையும் ஆட்சியாளரின் நலனுக்காக அவற்றைப் பயன்படுத்தியமையும்
- இஸ்லாமியப் பொருளாதார வழிகாட்டலைப் புறக்கணித்தமையும், அதுபற்றிய தெளிவின்மையும்
- பலவீனமான ஆட்சியாளர்கள் பதவிக்கு வந்தமை
- முஸ்லிம்களுக்கு மத்தியில் சமூக, அரசியல் ரீதியான பிரிவுகளும் பிளவுகளும் தோற்றம் பெற்றமை
- இஸ்லாத்தின் எதிரிகளின் திட்டமிட்ட சதி நடவடிக்கைகள்
- முஸ்லிம்கள் அறிவாராய்ச்சித் துறையைக் கைவிட்டு, இஸ்லாம் முக்கியத்துவம் கொடுக்காத சில்லறை விடயங்களில் மிதமிஞ்சிய ஆய்வுகளில் ஈடுபாடு காட்டியமை
- ஐரோப்பாவின் அரசியல் எழுச்சியும் ஸ்திரப்பாடும்
- கிலாபத் திட்டமிட்டு ஒழிக்கப்பட்டமை
- முன்னைய பரம்பரையினரின் கருத்துக்களைப் புனிதமானவையாகக் கருதி அவை விமர்சனத்துக்கு அப்பாற்பட்டவை எனக் கருதி அவற்றை முழுமையாக ஏற்றுக்கொண்டமை
- கற்பனா உலகில் சஞ்சரித்து நிஜ உலகில் நடைபெற முடியாத பிரச்சினைகளில் மூழ்கியமை
- ஷரீஆ விதிகளிலிருந்து சட்டபூர்வமாக நழுவிச் செல்வதற்கு உதவும் உத்திகளைக் கண்டு பிடிப்பதில் ஆர்வம் காட்டியமை
- மத்ஹபுகள் மீதான அதீத பற்றும் நான்கு மத்ஹபுகள் தவிர்ந்த ஏனைய மத்ஹபுகள் தடை செய்யப்பட்டவை என்ற கருத்தும் சமூகத்திடையே பரவலாக வலுவடைந்தமை

இவை போன்ற.. **(10 புள்ளிகள்)**

(ii) 'தஜ்தீத்' என்பதன் கருத்தை விளக்கி, அது இஸ்லாமிய வரலாற்றில் இயல்பாகவே இடம்பெறும் பணி என்பதை உறுதிப்படுத்துக.

- “தஜ்தீத்” :- புணர் நிர்மாணம்
  மீள் கட்டமைப்பு
  சீர்திருத்தம்

வரைவிலக்கணம் :- நபி ( ஸல் ) அவர்களின் மறைவின் பின் இஸ்லாம் மார்க்கத்தில் புகுத்தப்பட்ட இஸ்லாம் அல்லாத விடையங்களை அகற்றி இஸ்லாத்தை அதன் யதார்த்த நிலைக்கு ( அஸல் ) மீள் கொண்டு வருதல்

- இஸ்லாம் அல்லாஹ்வினால் அங்கீகரிக்கப்பட்ட அவனது பாதுகாப்பினைப் பெற்ற மார்க்கம் என்பதால் பலதரப்பட்ட சவால்களுக்கு மத்தியிலும் இஸ்லாம் உயிரோட்டம் மிக்கதாக இருத்தல்.
- "சத்தியத்தில் நிலைத்திருக்கும் ஒரு குழு எனது உம்மத்தில் எப்போதும் இருந்து கொண்டிருக்கும்" என்ற அல்குர்ஆன் வசனத்துக்கு அமைய அல்லாஹ் காலத்திற்கு காலம் சமூகப் புனர் நிர்மானிகளை அனுப்பி வைக்கிறான் என்ற கருத்து.
- இஸ்லாம் வீழ்ச்சியடைந்து கொண்டிருந்த வேளையில் முஜத்தித்கள் இயல்பாகத் தோன்றி பணியாற்றியிருத்தல்.

  உ + ம் : உமர்பின் அப்துல் அஸீஸ் (ரஹ்)

  அப்துல் காதிர் ஜிலானி (ரஹ்)
- கால மாற்றத்திற்கேற்ப இஸ்லாத்தின் அடிப்படைகள் பாதிக்கப்படாத விதத்தில் இஸ்லாத்தை முன் கொண்டு செல்வதற்கான வழிகாட்டல்களை இஸ்லாம் கொண்டிருத்தல்
- ஒவ்வொரு நூற்றாண்டின் ஆரம்பத்திலும் மார்க்கத்தை புணர்நிர்மாணம் செய்கின்ற ஒரு சீர்திருத்த வாதியினை அல்லாஹ் அனுப்புவான் என்ற நபிகளாரின் முன்னறிவிப்பு.

**(10 புள்ளிகள்)**